13th September 1958]

THE HON. SRI R. VENKATARAMAN : சர்க்கார் கூறிய யோசனை களில் ஓரிரண்டை ஏற்றுக்கொள்ள முடியவில்லை என்று United Planters' Association எழுதி இருக்கிறார்கள். ஸ்டிரைக் நோட்டீஸ் கொடுத்திருக் கும் தகவல் எங்களுக்குக் கிடைக்கவில்லை. இதைப் பற்றி மீண்டும் பேச்சு வார்த்தை நடத்தித்தான் முடிவு காணவேண்டும்.

*Iron*

* 228-G *Q*.—SRI P. G. MANICKAM : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) the places where iron ore deposits are found to be available ; and

(*b*) the persons to whom licences have been issued for the manufacture of pig iron and the places where the plants for the same have to be set up?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) A statement[a] is laid on the table of the House.

(*b*) Textool Company, Limited, Coimbatore, is the only company in this State which has been granted a licence to manufacture pig iron.

SRI P. G. MANICKAM : 304·65 மில்யன் டன்கள் இரும்பு தாதுப் பொருள்கள் இருப்பதாக மதிப்பிடப்பட்டிருக்கிறது. ஏன் கவர்ன் மெண்டார் இதற்காக தனியாக தொழிற்சாலை ஏற்படுத்தி, அதன் மூலம் இந்தத் தொழிலை நடத்துவதற்கு முயற்சி எடுக்கக்கூடாது என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : எல்லாம் நிதி இல்லாத காரணம் தான்.

SRI T. VELUCHAMI : நமது நாட்டில் பல பாகங்களில் இரும்பு தாதுப் பொருள்கள் கிடைக்கக்கூடிய நிலைமை இருக்கிறது. அந்தக் காலத்திலே நமது முன்னோர்கள் இரும்பு தாதுக்களை எடுத்து சிறு சிறு காளவாய்களை வைத்து உருக்கி இம்மாதிரி தொழில் செய்திருக்கக் கூடிய சின்னங்களை அநேக இடங்களில் நாம் பார்க்கிறோம். உருக்குவதற்கு கொஞ்சம் செலவு அதிகமானாலும் இப்பொழுது உள்ள மார்க்கெட் விலைக்கு கட்டுபடியாகக்கூடிய நிலையில்தான் அது இருக்கவேண்டும். ஆகவே, உருக்குவதற்கு செலவு கூடுதலானாலும் பரவாயில்லை என்று கருதி இந்தத் தொழிலுக்கு ஒரு புத்துயிர் கொடுத்து பல பாகங்களில் இதை சிறிய அளவிலே செய்யக்கூடிய முறையை சொல்லிக்கொடுத்து, இந்த கைத்தொழிலை முன்னேற்றம் அடையச் செய்வதற்கு சர்க்கார் உத்தே சிக்குமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : துரதிர்ஷ்டவசமாக, இரும்பு, எஃகு போன்ற கனிப்பொருள்களெல்லாம் சிறு குடிசைத் தொழிலாக நடத்தினால், பெரிய இயந்திரங்களின் மூலம் வரும் பொருள்களுடன் இது போட்டியிட முடியாது என்ற காரணத்தினால் சிறு தொழில்களாக இவைகளை அமைப்பதற்கு முயற்சிகள் எடுத்துக் கொள்வதில் பிரயோசன மில்லை என்ற அபிப்பிராயம் இருந்துகொண்டு வருகிறது. ஆகையால் 15,000 டன் அளவுக்கு குறைந்து எந்த பிளான்டு வைத்தாலும் அது கட்டுபடியாகாத யூனிட்டாகப் போய்விடும். 15,000 டன்னுக்கு ஒரு கம்பெனிக்கு லைசென்ஸ் கொடுத்து வேலை நடந்துகொண்டிருக்கிறது. மேலும் சர்க்கார் இரண்டு கம்பெனிகளுக்கு லைசென்ஸ் கொடுக்கவேண்டு மென்று மத்திய சர்க்காருக்கு சிபார்சு செய்திருக்கிறது.

---

[a] Printed as Appendix IV on pages 874-876 infra.